டுடைத்து' என்றார்; 'இடுக்கணிடுக்கட்படும்' என்றார் என்று சொல்லுதலாம்.

† முன்வந்த இடும்பையெனும் சொல்லும் அதன் பொருளும் பின்னும் வந்தமையின், இக்குறள் சொற்பொருட்பின் வருநிலையணியாம். சொற்பொருட்பின் வருநிலையணியாவது:—முன்வந்த சொல்லும் பொருளும் பின்னும் பலவிடத்து வருவதாம்.

‡ முதலிய என்றமையின், மணல் நிலம், செங்குத்தான இடர், களர் நிலம் முதலியவற்றையும் கொள்க.

¶ சீவக சிந்தாமணி - 'முத்தியிலம்பகம் 186-' வது செய்யுளின்கண் "மருங்கொற்றி மூக்கூன்றித் தாடவழ்ந்து வாங்கி" என்றன்ன பிரயோக மிங்குணர் தற்பாலதாம்.

88



க்குமாறுபோலத் தன்மெய்வருத்த நோக்காது முயன்றுய்ப்பானென்பார் 'பகடன்னான்' என்றார்.

தெளி:—(இ - ள்.) மடுத்தவாயெல்லாம் - தடைப்பட்ட இடங்களெல்லாவற்றிலும், பகடன்னான் - பண்டியை இழுத்துச்செல்லும் எருதுபோலத் தொழிலை மேற்கொண்டு செலுத்தவல்லவனை, உற்ற - (வந்து) அடைந்த, இடுக்கண் - துன்பமானது, இடர்ப்பாடு - (தானே) துன்பப்படுதலை, உடைத்து - உடையதாம், (எ - று).

'மடுத்தவாயெல்லாம்' என்பது பண்டியை இழுத்துச் செல்லும் எருதிற்கும் தொழிலை மேற்கொண்டு செலுத்துகின்றவனுக்கும் பொதுவாக நின்றமையின், அம்மடுத்தவாயெல்லாமென்பதனைப் பண்டிக்குச் சேற்றுநிலை முதலியனவாகவும், தொழிலுக்குத் தடைகளாகவும் கொள்க. தடைநேரிட்டபோது எருது பக்கங்களில் உராய்ந்தும் நிலத்தில் மூக்கையூன்றியும் கால்களை மடக்கிவைத்துத் தவழ்ந்தும் அரிதாகப்பண்டியைச் செலுத்தும் விதம்போலத் தொழிலை மேற்கொண்டவன் தடைநேரிட்டபோது தன் சரீரப் பிரயாசத்தை நோக்காமல் முயற்சிசெய்து அதனைச் செலுத்துவான்

வர்ப்பார் 'பகடன்னான்' என்றார்

(க - து.) மேற்கொண்ட தொழிலைத் தடை நேரிட்டபோது தளர்ச்சியின்றி முடிக்கவல்லவனை யடைந்த துன்பமானது தானே துன்பப்படும் என்பது.

4. Troubles will vanish before the man, who struggles against difficulties as a buffalo drawing a cart through deep mire.



ரு. அடுக்கி வரினு மழிவிலா னுற்ற
விடுக்க ணிடுக்கட் படும்.

பரி:—(இ - ள்.) இடைவிடாது மேன்மேல் வந்தன வாயினும், † தன்னுள்ளக் கோட்பாடு விடாதவன் உற்ற விடுக்கண்டாம் இடுக்கணிலே பட்டுப்போம், (எ - று).

ஒன்றே பலகால் வருதலும் வேறுபட்டன விராய்வருதலு மடங்க 'அடுக்கிவரினும்' என்றார். ‡ அழிவென்னுங் காரணப்பெயர் காரியத்தின் மே னின்றது. இவை மூன்றுபாட்டானும் தெய்வத்தானுவதற் கழியாமை கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்) அடுக்கி வரினும் - இடைவிடாது மேலுமேலும் வந்தனவாயினும், அழிவிலான் - (தன்னுள்ளக்கோட்பாடு) விடாதவனை,

† தன்னுள்ளக் கோட்பாடு - தன் மனக்கொள்கையாகிய தைரியம்.

‡ அழிவு - மனக்கலக்குதல்; அஃது இங்கு அதனலாய உள்ளக்கோட்பாடு விடுதலை (மனவுறுதி யொழிதலை) யுணர்த்துதலால், கருவியாகுபெயராம். மனக்கலக்கத்தால் அதைரியமுண்டாம் என்பது கருத்து.